# அருளோசை

திருவள்ளுவர்
ஆண்டு 2003
பரிதாபி ஆவணி
1972 ஆகஸ்ட்டு







## தமிழ்நாடு தெய்விகப் பேரவை

சென்னை-18

## அட்டைப்பட விளக்கம்

பண்சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்
பெண்சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்
விண்சுமந்த கீர்த்தி வியன்மண்ட லத்தீசன்
கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை
மண்சுமந்து கூலிகொண்டக் கோவால் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய்.

— மாணிக்கவாசக சுவாமிகள்.

மதுரையில் சிவபெருமான் பிட்டுக்கு மண்சுமந்து பிரம்படி பட்டதைப் புகழ்ந்து பேசுகிறார் மாணிக்கவாசகர். அந்த திருவிளையாடல் ஆவணி மூலத்தில் நடந்தது. அது ஆவணி மாதம் 4ஆம் நாள் (20—8—72) வருகிறது. அதை நினைவூட்டுவதற்காகவே அட்டைப்படம்.

---






(திங்களிதழ்)

ஞாலம் நின் புகழே மிக வேண்டும் தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே.


| மணி 1 | பரிதாபி ஆவணி<br>1972 ஆகஸ்டு | ஓசை 2 |
| --- | --- | --- |


## அருளோசை அன்பர்களுக்கு

வணக்கம், அருளோசை இரண்டாவது இதழ் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருநட்சத்திரமான சுவாதியில் (இந்திய விடுதலைநாள் வெள்ளி விழாவன்று) வெளிவருகிறது. அன்பர்கள் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருநாளையும் விடுதலை நாள் விழாவையும் சிறப்புறக் கொண்டாடுவீர்கள் என்று நம்புகிறோம்.

அன்பர்களுக்கு வேண்டுகோள்—"அருளோசை" தொடர்பான அஞ்சல்கள் எழுதும் போது தவறாமல் தங்கள் சந்தா எண்ணை எழுதுங்கள். அருளோசை முதல் இதழ் அனுப்பி வைப்பதில் சற்று சுணக்கம் ஏற்பட்டதைப் பொறுத்துக் கொள்ள வேண்டுகிறோம். முதல் இதழுக்கு இதுவரை விடை எழுதி அனுப்பாதவர்கள், இந்த இதழுக்கும் சேர்த்து விடை எழுதி 31-8-72க்குள் அனுப்பிவைக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்.

அ. நாராயணசுவாமி, பி. ஏ.,
பதிப்பாசிரியர்.

## இந்த இதழில்



## அறிவிப்பு

ஜூலை, ஆகஸ்டு வினாவிடைப் பகுதியில் பரிசு பெற்றவர்களின் பெயர்களை செப்டம்பர் இதழில் வெளியிடப்படும்.

மு. கண்ணப்பன்
அறநிலைய அமைச்சர்

தமிழ்நாடு அரசு
தலைமைச் செயலகம்
சென்னை—9
ஜூலை. 17, 1972

பேரன்புடையீர்.

" * * * "அருளோசை" இதழ் தொடர்ந்து தமிழகத்தில் சமயக் கல்வியினையும் நெறியினையும் வளர்க்கவும், திருக்கோயில், திருமடங்கள், மற்றும் ஏனைய அறநிலையங்களின் தூய்மையையும், அவைதம் சொத்துக்களையும் நன்கு பராமரித்தும் நல்லுணர்வைப் பெருக்கவும் உறுதுணைபுரியும் என்பதில் ஐயமில்லை. "அருளோசை" சிறப்புற முழங்கிடவும், மாலைக்கால வித்துவான் கல்லூரி சிறந்த பணியாற்றிப் பெருமையுற்றிடவும் என் இதய மார்ந்த நல்வாழ்த்துக்களை உரித்தாக்கிக் கொள்ளுகிறேன்.

அன்புள்ள

(ஒ-ம்) மு. கண்ணப்பன்






## நல்வாழ்த்துகள் !

"கண்டதே காட்சி, கொண்டதே கோலம்" என்ற வழக்கு அறியாமையின் பாற்பட்டது. காணப்படுகின்ற பொருள் களுக்கு உள்ளீடு உண்டு; பின்னணி உண்டு. காணப்படும் கோலத்திற்கும் அதுபோல அகநிலைகள் உண்டு. இரண்டும் ஒன்றுபட்டனவல்ல. நடைமுறைக்கு இசைவாக வேண்டு மானல் இருக்கலாம். ஒன்ருதல் என்பது வேறு. இசைந் திருத்தல் என்பது வேறு. ஆதலால், காணப்படுகின்ற உலகம் மட்டுமே உண்மை என்பதும், கொண்டு வாழும் கோலமே உண்மை என்பதும் பகுத்தறிவிற்கும், பட்டறிவிற் கும் உடன்பாடல்ல. உலகியலே உண்மையென்று கூறும் சமயிகள், உய்த்தறியும் அறிவாகிய அனுமானத்தை ஏற்றுக் கொள்வதில்லே. மனிதன் ஆறறிவுடையவன். அவனுக்கு இருக்கும் ஒரே பெருமை உய்த்தும், உற்றும் அறிதல் என்பதே. அவனுடைய விஞ்ஞானப் படைப்புகள் அனைத் தும் உய்த்தறிதலின் விளைவுகளே என்பதை யார்தான் மறுக்க முடியு? அதுபோலவே, உற்றறிதலின் பயனுகவும் அவன்ம் படைத்துக்கொண்ட வாழ்வியல் இன்பங்கள் பலப்பல.

செல்வ, உலகியலே உண்மை என்பார் உலகியல் இயக் கத்தின் பகுதிகளாகிய நிலம், நீர், தீ, வளி, வான் ஆகியவை களையே உள்பொருள் என்பர்; அவைகளின் கூட்டாலும். மாறுபாடுகளாலும் தோன்றுவனவே உயிர்கள் என்பர், செல்வ, அவர்கள் அக்கொள்கையை விளக்க எடுத்துக்காட்டும் உவமை இதோ :

"மட்கலம் செய்யும் திகிரியின்மேல் மண் வைக்கப்படு கிறது. அது பல்வேறு வடிவினவாகிய மட்கலங்களாக உரு வாகின்றன. அதுபோலவே இவ்வுலகப் பொருள்கள் தோன்றுகின்றன."

இந்த உவமையில் ஒரு 'மலை' மறைந்திருப்பது உனக் குத் தெரிகிறதா? மட்கலம் செய்யப் பயன்படும் சக்கரத்தின் மேல் மண்ணை வைத்த அளவிலேயே மட்கலங்கள் உருவாகி விடுவதில்லை. சக்கரத்தைச் சுற்றுபவன் ஒருவன் தேவையே என்பதை அவர்கள் அறியாதது வியப்பே! அதுமட்டுமா? மட் கலம் செய்யும் குயவன் சக்கரத்தைச் சுற்றுகிறான், தேவைக்கு தக்கவாறு. தேவைக்குத் தக்கவாறு சக்கரத்தை விரைவாக வும் மெதுவாகவும் சுற்றுவதோடன்றி மண்ணைக் கூட்டியும் குறைத்தும் வளைந்தும் வளைத்தும் வடிவம் கொடுக்கிறான் என்பதை அறியாதார் அறிவென்னே! குயவன் மட்கலங்களை வடிவம் கொடுத்து அமைக்கும்பொழுது அவன்றன் விருப்ப மும், தேவையும் குறிக்கோளன்று. மட்கலத்தை வாங்கிப் பயன்படுத்துவோர் வேட்கையும் தேவையுமே குயவனின் மட் கலப்படைப்புக்குக் குறிக்கோள். இவற்றையெல்லாம் அறி யாத ஒரு கொள்கையை எங்ஙனம் அறிவின்பாற் படுத்த முடி யும்? நமது சமயநெறி குயவனை அறிந்து இனம் காட்டுகிறது; குயவனின் படைப்புக்குக் காரணமாகவுள்ள விருப்பார்வம் மிகுதியுடைய உயிர்களையும் கண்டு இனம் காட்டுகிறது.

செல்வ, அதுமட்டுமா? ஐம்பூதங்கள் தத்தம் போக்கில் சேருமானால், அதில் ஓர் ஒழுங்கு இருக்குமா? நியதி இருக்குமா? ஆறறிவு படைத்த மனிதனே கூடத் தன்னிச் சைப் போக்கில் வாழ்வானானால் அவனுடைய வாழ்க்கையில் ஒழுங்கு இருக்காது; ஒழுக்கமும் கால்கொள்ளாது; இன்பமும் இல்லை. நாம் காணும் உலகியல், ஒழுங்குமுறை பிறழ்ந்த தாகவா இருக்கிறது? இந்த உலகத்தின் நடைமுறையில் மாறுபடாத ஓர் ஒழுங்கும் நியதியும் (Order-Consistency) இருப்பதை எண்ணி வியவாதார் யார்? இந்த உலகத்தின் நடைமுறையிலிருக்கும் மாறாத ஒழுங்குமுறைகளைக் கண்டு சிசரோ என்ற பேரறிஞன் வியந்து "இந்த ஒழுங்கு முறை களுக்குக் காரணம் மனிதனல்ல. ஏனெனில் அவன் அடிக்கடி

ஒழுங்குகளினின்று வழுவுகின்ருன். இத்த மாருத ஒழுங்கு முறைக்குக் காரணம் கடவுளே ’’ என்று பாராட்டுகின்ருன்.

செல்வ, உலகப் பொருள்களை அங்ஙனம் சொன்ன உல கியல் வாதிகள், உயிர்த் தோற்றத்திற்குக் காட்டும் காரணம் நகைப்பிற்கிடமானது. “வெற்றிலை, பாக்கு, சுண்ணும்பு-இவை மூன்றையும் சேர்த்து வாயிற்போட்டுக் குதப்பினுல், சிவப்புநிறம் தோன்றுகிறதல்லவா? அதுபோல ஐம்பெரும் பூதங்களின் (நிலம், நீர், தீ, வளி, வான்) இணைப்பால்-கூட் டால் உடல் தோன்றும் பொழுது ஒருவகை உணர்ச்சி தோன் றுகிறது. அதுவே உயிர்’’ என்கின்றனர். சிரிக்காதே! வெவ்வேறு பொருள்களாகிய வெற்றிலை, பாக்கு, சுண்ணும்பு ஆகியவற்றை முறையாகக் கூட்டுபவன் ஒருவன் வேண்டு மென்பதை எப்படித்தான் மறந்தனரோ, தெரியவில்லை! அது மட்டுமா? வெற்றிலை, பாக்கு, சுண்ணும்பை யார் எந்தச் சூழ் நிலையில் கூட்டினுலும் தோன்றும் நிறம் சிவப்பாகவே இருக் கும். அந்தவண்ணம் கூட்டுகிறவனுடைய நிலைமைக்கேற்ப நீலமாகவோ, கறுப்பாகவோ தோன்றுவதில்லை. நமது சமயம், ‘‘உடல்கள் ஐம்பெரும் பூதச்சேர்க்கையால் உண்டு. ஆனுலும் உயிர், ஐம்பெரும்பூதச் சேர்க்கையில் தோன்றிய தல்ல. உயிர் என்றும் உள்பொருள். உயிர்க்குத் தோற்றமு மில்லை; மறைவுமில்லை என்று கூறுகிறது. வெற்றிலை, பாக்கு, சுண்ணும்பு ஆகியவற்றைக் கூட்டுபவனைப்போல, உயிர்க்குரிய உடலைக் கடவுள் தருகிருன். ஒருவனே கொடுத்தாலும் வெற்றிலை, பாக்கு, சுண்ணும்பு கலப்பைப் போல ஒரே நிறமாக இல்லாமல் உயிர்களின் தன்மைகள் மாறுபட்டிருப்பதால் உயிர் களின் இயல்புகள் ஒத்தனவாக இல்லை. இந்தச் சாதாரண உண்மைகள்கூட அறிவாளிகள் என்று தம்பட்டம் அடித்துக் கொள்ளும் -உலகியலே உண்மையென்னும் கொள்கையின ருக்கு விளங்காமற் போனதுதான் புரியாத புதிர்! செல்வ, அடுத்த கடிதத்தில் மேலும் ஆராய்வோம்.

இன்றைக்குன் அடிகளார்




## திருவல்லிக்கேணி
## பார்த்தசாரதிப் பெருமாள்கோயில்

திரு. கே. எஸ். நசிரம்மன், B.A., B,L., I.A.S.,
ஆணையர், அறநிலையத்துறை, சென்னை.

தருமமிகு சென்னையைச் சார்ந்த தலங்களுள், மிக்க பழமையும் பெருமையும் வாய்ந்ததொன்ருகச் சிறந்து திகழ்வது, திருவல்லிக்கேணிப் பார்த்தசாரதிப் பெருமாள் கோயில் ஆகும். ஆழ்வார்களால் மங்களா சாசனம் செய்யப்பெற்ற 108 திவ்விய தேசங்களுள், திருவல்லிக்கேணி யும் ஒன்று. இத்தலத்தினைப் பேயாழ்வார், திருமழிசையாழ்வார் திரு மங்கையாழ்வார் ஆகிய மூவர் புகழ்ந்து போற்றிப் பாடியுள்ளனர்.

ஒருசமயம் திருபாற்கடலிற் பள்ளிகொண்டுள்ள திருமாலிடம், மகா லட்சுமி ஆகிய திருமகள் ஊடல்கொண்டு பிரிந்து, பூவுலகத்திற்குப் போந்து வேதவல்லி என்னும் பெயருடன், அல்லிக்கேணி என்னும் கயிரவிணி தீர்த்தத்தில் தோன்றியருளினுள். இந்த அல்லிக்கேணி என்னும் திருக்குளத்தின் பெயரே, ஊருக்கு அமைந்து திருவல்லிக் கேணி என வழங்கி வருகின்றது. அல்லிக்கேணியில் தோன்றிய வேதவல்லித்தாயாரை இங்குத் தவம்புரிந்து கொண்டிருந்த பிருகு முனிவர் எடுத்து வளர்த்து வந்தார். பின்னர்த் திருவரங்கநாதர் ஓர் அழகிய இளவரசர் வடிவத்தில், மன்னுதர் என்னும் பெயருடன் போந்து சுத்த மகா துவாதசிநாளில் திருமணம் புரிந்துகொண்டு, இங்கேயே தங்கிப் பக்தர்களுக்கு எல்லா வரங்களும் அளித்து வருகின்ருர். மன்னுதர் என்னும் திருவரங்கநாதருக்கு, இக்கோயிலில் தனியே சந்நிதி உள்ளமை காணலாம். இந்தக் கோயிலில் மன்னுதரின் சந்நிதியே, மிகவும் பழமை வாய்ந்ததாகும். பிருகு அத்திரி மரீசி மார்க்கண்டேயர் சுமதி ஜாலி சப்தரோமர் என்னும் ஏழு முனிவர்கள் இங்கே தவம் புரிந்து, அருள் பெற்றனர்.

முன்ஞெருகாலத்தில் சுமதி என்னும் முனிவர் திருப்பதி என்னும் திருவேங்டமலையிலுள்ள பெருமாளை நோக்கித் தவம் புரிந்து அவர் துவாபர யுகத்தில் கிருஷ்ணனுக அவதரித்துக் குருக்ஷேத் திரத்தில் நிகழ்ந்த மகாபாரதப் போரில் பார்த்தன் என்னும் அருச்சுனனுக்குத் தேர்ச் சாரதியாக விளங்கியும், கீதோபதேசம்

புரிந்தும், அருள்புரிந்த திருவுருவத்தைக் காட்டி யருளுமாறு வேண்டிக் கொண்டார். அவருக்குத் திருவேங்கடவன் வெளிப்பட்டு, பிருந்தாரணியம் என்னும் திருவல்லிக்கேணியில் சென்று தவம் புரிந்தால், பின்னர் அத்திருவுருவத்தைக் காட்டியருளுவதாகப் பணித்தார். அதன்படியே சுமதி முனிவர் திருவல்லிக்கேணி வந்து தவம் புரிந்து கொண்டிருந்தார்.

அதே சமயத்தில், ஆத்திரேயர் என்னும் மாமுனிவர் வேதவியாசரிடம் சென்று, தாம் தவம் புரிவதற்குரிய தகுந்த இடம் ஒன்றை ஆராய்ந்து கூறுமாறு பணிந்து வேண்டிக்கொண்டார். அப்போது வேதவியாசர், "தென்னுட்டில் திருவல்லிக்கேணி என்னும் தலம் ஒன்றுள்ளது. அங்கே சுமதி என்னும் முனிவர் ஒருவர் பெருமாளைப் பார்த்தசாரதி வடிவில் காணவிரும்பித் தவம்புரிந்து கொண்டிருக்கின்ருர். நீரும் அங்கே சென்று தவம் புரிக" என்று கூறிப் பார்த்தசாரதிப் பெருமாளின் திவ்விய மங்கள விக்கிரகம் ஒன்றைக் கொடுத்தனுப்பினுர். ஆத்திரேய முனிவர் திருவல்லிக்கேணியை அடைந்து, சுமதி முனிவரிடம் அத்திருவுருவத்தைக் கொடுத்து, நட்புக்கொண்டு அளவளாவி மகிழ்ந்தார். சுமதி முனிவர் அத்திருவுருவத்தைத் திருவல்லிக்கேணியில் பிரதிட்டை செய்து சித்திரைப் பெருவிழாக் கொண்டாடி மகிழ்ந்தார். எனவே பார்த்தசாரதியை வியாசர் பிரதிட்ட மூர்த்தி, ஆத்திரேயர் ஆராதித்த மூர்த்தி என்று பெரியோர்கள் போற்றுவர்.

இங்ஙனம் திருவேங்கடமலையிலுள்ள பெருமாளே கிருஷ்ணனுகக் காட்சி தந்தமையால் பார்த்தசாரதிப் பெருமாளுக்கு வேங்கட கிருஷ்ணன் என்ற ஒரு பெயர் வழங்கும். பார்த்தசாரதிப் பெருமாள் வலக்கையில் சங்கும், இடக்கையில் வரத அஸ்தம் என்னும் ஞானமுத்திரையும் கொண்டு விளங்குகின்ருர். அவருடைய இடக்கையானது பக்தர்களுக்குத் தன்னுடைய பாதங்களைச் சுட்டிக்காட்டும் நிலையில் அமைந்திருக்கின்றது. கிருஷ்ணன் பகவத் கீதையில் "எல்லாத் தருமங்களையும் அடியோடு கைவிட்டு, என்னுடைய சரணங்களையே உபயமாகப் பற்று; நான் உன்னை எல்லாப் பாவங்களினின்றும் விடுவிப்பேன், வருந்தாதே" என்று அருளிச் செய்த கருத்தை இக்குறிப்பு உணர்த்துகின்றது. பார்த்தனுக்குச் சாரதியாக விளங்கிய கண்ணபிரான், கீதையை உபதேசித்த திறனையும் இத்திருவுருவிற் காட்டியருளுதலால், இவருக்குக் கீதாச்சாரியன் என்றும் ஒரு பெயர் உண்டு.

இவ்வாறு வேங்கடகிருஷ்ணன் எனவும், கீதாச்சாரியன் எனவும் பெயர் பெற்று விளங்குகின்ற பார்த்தசாரதிப் பெருமாள், இக்கோயிலில் எழுந்தருளியுள்ள நிலை, பக்தர்களின் உள்ளத்தைப் பெரிதும் பரவசப் படுத்துவதாகும்.

"பற்றலர் வீயக் கோல் கையிற் கொண்டு
பார்த்தன் தன் தேர்முன் நின்ருன்"

எனத் திருமங்கையாழ்வார் பாடியபடி, பார்த்தனுக்குச் சாரதியாக விளங்கிய கண்ணபிரான், இங்கே பக்தர்களின் பொருட்டுத் தன் குடும்பத்தினர் அனைவருடனும் எழுந்தருளிக் காட்சி தரும் நிலையில்

விளங்குகின்ருன். பார்த்தசாரதிக்கு வலப்பக்கத்தில் உருக்குமிணித் தாயார் விளங்குகின்ருர். அருகில் பலராமர் ஆகிய தமையனும், சாத்தகி என்னும் தம்பியும் உள்ளனர். மற்றும் பிரத்யும்நன் என்னும் மகனும் அநிருத்தன் என்னும் பேரனும், அக்ரூரர் என்னும் தோழரும் உள்ளனர். இங்ஙனம் கண்ணபிரான் தன் குடும்பத்தினர் அனைவருடன் ஒருசேர விளங்கிக் காட்சிதரும் நிலையைத் திருவல்லிக்கேணியிலன்றி வேறு எங்கும் காண்டல் இயலாது.



பார்த்தசாரதிப் பெருமானின் உற்சவ மூர்த்தம் என்னும் திருவுருவத்தின் முகத்தில், அம்புத்தழும்புகள் பல அமைந்திருப்பதைக் காணலாம். குருக்ஷேத்திரத்தில் நிகழ்ந்த பாரதப் போரில், பீஷ்மருக்கும் பார்த்தனுக்கும் கடும்போர் நிகழ்ந்தபோது. பரசுராமரிடம் விற்பயிற்சி பெற்ற பெருவீரராகிய பீஷ்மாச்சாரியரின் கணைகள் பார்த்தன்மேல்பட்டு, அவனுக்குக் கேடு நிகழாதபடி செய்வதற்காக, அவற்றை கண்ணபிரான் தாமே தம் கருணையினுல் தம்மேல் ஏற்றுக்கொண்டு காப்பாற்றியருளிய பெருந்தகைமையை, அத்தழும்புகள் குறிப்பிக்கின்றன.

ஒவ்வொரு நாளும் நிகழும் அபிஷேகத்திற்குப் பின்னர்ச் சிறிது நேரத்திலேயே இத்திருவுருவின் பொன்னிற விளக்கம் மாறி, பெருமாளுக்கே இயல்பாக உரிய அழகிய கருநீல நிறத்தை அடையும் திறம், தரிசித்து வியந்து மகிழ்தற்பாலதாகத் திகழ்கின்றது. பார்த்தசாரதிப் பெருமாளின் திருமார்பில், விலையுயர்ந்த மணிகள் பதித்த பிரபை சூழப் பொன்னுல் இயன்ற மகாலட்சுமியின் திருவுருவம் அமைந்துதிகழும்

காட்சி, "எந்தை ஒருவல்லித்தாமரையாள் ஒன்றிய சீர்மார்பன் திரு வல்லிக்கேணியான்" என்று பேயாழ்வார் பாடியதனை மெய்ப்பிக்கின்றது.

பார்த்தசாரதிப் பெருமாள் கோயிலில், அவருக்குப் பின்புறம் மேற்கு நோக்கிய சந்நிதி ஒன்றும் உள்ளது. அங்கே தெள்ளிய (அழகிய) சிங்கர் என்னும் நரசிங்கப்பெருமாள் கோயில் கொண்டுள்ளார். ஆத்திரேய முனிவரின் தவநலத்திற்கு மகிழ்ச்சியுற்ற பெருமாள், இங்கு அவருக்கு அவர் விரும்பியபடி வைகாசி சுத்த சதுர்த்தசி நாளில் நரசிங்கப் பெருமாளாகக் காட்சியளித்தார். இச்சந்நிதியிலுள்ள மூலவரின் பெயர் யோக நரசிம்மர். உற்சவரின் பெயர் தெள்ளிய சிங்கர்.

பள்ளியில் ஓதி வந்ததன் சிறுவன்
வாயில்ஓர் ஆயிர நாமம்
ஒள்ளிய ஆகிப் போத ஆங்குஅதனுக்கு
ஒன்றும்ஓர் பொறுப்பிலன் ஆகிப்,
பிள்ளையைச் சீறி வெகுண்டுதூ ண்புடைப்பப்
பிறைபெற்று அனல்விழிப் பேழ்வாய்த்
தெள்ளிய சிங்கம் ஆகிய தேவைத்
திருவல்லிக் கேணிக் கண்டேனே

எனவரும் திருமங்கையாழ்வார் பாசுரத்தில், தெள்ளிய சிங்கப்பெருமாள் பற்றிய குறிப்பு வந்திருத்தல் அறியற்பாலது.

இக்கோயிலிலேயே தெற்கு நோக்கிய மற்றொரு சந்நிதி உள்ளது. இங்கே மதுமன் மகரிஷியின் வேண்டுகோளுக்கு இணங்கி, இராமபிரான் இலக்குவன் பரதன் சத்துருக்கன் சீதை அனுமான் ஆகியோருடன் எழுந்தருளிக் காட்சிதந்து விளங்குகின்றார். இராமர் சந்நிதிக்கு எதிரில் ஆஞ்சநேயர் சந்நிதி உள்ளது. இராமபிரான் இங்குத் தன் தம்பியருடனும், பிராட்டியுடனும் காட்சிதருதலை

பரதனும் தம்பி சத்துருக் கனனும் இலக்குமனோடு மைதிலியும்,
இரவும்நன் பகலும் துதிசெய்ய நின்ற இராவணாந் தகனை
[எம்மானைக்
குரவமே கமழும் குளிர்பொழில் ஊடு குயிலொடு மயில்கள்
நின்றால
இரவியின் கதிர்கள் நுழைதல்செய் தறியாத் திருவல்லிக்
[கேணிக் கண்டேனே

என்று திருமங்கையாழ்வார் தமது பதிகத்தில் குறிப்பிட்டிருத்தல் அறிந்து மகிழ்தற்குரியது.

சப்தரோம மகரிஷியின் தவத்திற்கு மகிழ்ந்து, அவர்தம் வேண்டுகோளுக்கு இணங்கிப்பெருமாள், கஜேந்திர வரதராஜசுவாமி ஆகவும் இங்குக் காட்சி தருகின்றார். "ஆனையின் துயரம் தீர புள்ளூர்ந்து சென்று நின்று ஆழி தொட்டானைத் தேனமர் சோலை மாடமா மயிலைத் திரு வல்லிக்கேணிக் கண்டேனே" என்று, கஜேந்திர வரதராஜ சுவாமி பற்றிய குறிப்பும் திருமங்கையாழ்வார் பாசுரத்தில் வந்திருக்கக் காண்கின்றோம்.

இவ்வாறு, திருவல்லிக்கேணி பார்த்தசாரதிப் பெருமாள் கோயில், பற்பல சிறப்புக்களை உடையதாகத் திகழ்கின்றது. வைணவ ஆழ்வார்களுக்கும் ஆசாரியர்களுக்கும், இங்கே பல சந்நிதிகளும் திருவுருவங்களும் அமைந்துள்ளன. வேதமும் திருவாய்மொழியும் ஆண்டு முழுவதும் ஓதப்படுகின்றன. எல்லா ஆழ்வார்களுக்கும் ஆசாரியர்களுக்கும் விழாக்கள் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன. ஆண்டில் ஒவ்வொரு மாதமும் இங்கே விழாக்கள் நடைபெறுவதைக் காணலாம். கோயில் திருமலை-பெருமாள் கோயில்-அயோத்தி-அகோபிலம் என்னும் ஐந்து தலத்து எம்பெருமான்களும் ஒருசேர இங்கே எழுந்தருளிக் காட்சி தருகின்றனர். கோயில் மன்னுதர்; திருமலை வேங்கடகிருஷ்ணர் (பார்த்த சாரதி); பெருமாள்கோயில் கஜேந்திரவரதர்; அயோத்தி இராமபிரான்; அகோபிலம் நரசிம்மர் என்னும் ஐந்து மூர்த்திகளின் தரிசனமும் ஒருங்கே கிடைப்பது, வேறு எங்கும் பெறமுடியாத தனிச் சிறப்பாகும்.

அன்றியும் போகமூர்த்தம், யோகமூர்த்தம், வீரமூர்த்தம் என இறைவனின் திருவுருவங்களை மூன்ருகக் குறிப்பிடுவார். ஒவ்வொரு கோயிலில் ஒவ்வொரு மூர்த்தம் மட்டுமே அமைந்திருக்கும், ஆனுல் இக் கோயிலிலோ மூன்று மூர்த்தங்களுமே ஒருசேர அமைந்திருக்கின்றன. போகமூர்த்தம்-மன்னுதர்; யோகமூர்த்தம்-நரசிம்மர்; வீரமூர்த்தம்-பார்த்தசாரதி. இவ்வாறு மூன்று மூர்த்தங்களையும் ஒரே சமயத்தில், ஒரே இடத்தில் தரிசிக்கப்பெறுவதும் பக்தர்களின் பேறேயாகும். இது மட்டுமல்லாமல் இறைவனின் திருவுருவங்கள் ஆசனம் ஸ்தானகம் சயனம் என மூன்று வகையான நிலைகளில் கோயில்களில் அமைந்திருக்கும். திருவல்லிக்கேணியில் ஸ்தானக நிலையில் பார்த்தசாரதியும், ஆசன நிலையில் நரசிம்மரும், சயன நிலையில் மன்னுதர் என்னும் அரங்கநாதரும் விளங்குவதை, நாம் தரிசித்து மகிழலாம்.

இவ்வாறு எத்தனையோ பல சிறப்புகளையுடைய திருவல்லிக்கேணிப் பார்த்தசாரதிப் பெருமாள்கோயில், மிக்க பழமையும் பெருமையும் வாய்ந்த ஒரு கோயிலாகும். "தென்னன் தொண்டையர்கோன் செய்த நன்மயிலைத் திருவல்லிக்கேணி நின்ருன்" என்று திருமங்கையாழ்வார் பாடியிருத்தலால், இக்கோயில் மிகப் பழங்காலத்தில் தொண்டைமான் சக்கரவர்த்தியால் கட்டப்பட்டதெனத் தெரிகின்றது. அது பின்னர் பல்லவ அரசர்களால் புதுப்பித்துத் திருப்பணி செய்யப் பெற்றது என்னும் செய்தி இங்குக் காணப்படும் நந்திவர்மபல்லவன் (கி.பி.800-830) கல்வெட்டுகளால் அறியப்படுகின்றது. சோழர்களும் பாண்டியர்களும் கூட இக்கோயிலில் மிகவும் ஈடுபாடு கொண்டிருந்தனர். பற்பல தானங்களை வழங்கினர். மூன்ரும் குலோத்துங்கசோழன் மாறவர்மன் குலசேகரபாண்டியன் ஆகியோர் கல்வெட்டுகள் இதற்குச் சான்று பகர்கின்றன. பிற்காலத்தில் விஜயநகர அரசர்களும் இக்கோயிலுக்குப் பற்பல திருப்பணிகள் செய்து நிபந்தங்கள் அளித்துள்ளனர். இங்குள்ள திருவாய்மொழிப் பிரபந்த மண்டபத்தின்கண் அழகிய பல சிற்பங்கள் உள்ளன. அவைகள் பல்லவர் காலத்தினவாய் இருக்கக் கூடுமென்று கருதப்படுகின்றன.

இவ்வளவு பழமையும் பெருமையும் மிக்க இக்கோயிலைத் தரிசித்து, நாம் இம்மை மறுமை நலங்கள் எல்லாம் பெற முயல்வோமாக.




# முருகன் பெருமை

திரு. ந. ரா. முருகவேள். எம்.ஏ., எம்.ஓ.எல்.,

முன்னுரை :

ஒரு நாட்டில் வாழும் மக்களின் பண்பிற்கு ஏற்பவே, அவர்கள் வணங்கும் தெய்வத்தின் இயல்புகளும் அமைகின்றன. தங்களால் வணங்கப்பெறும் தெய்வ இயல்புகளையே, ஒவ்வொரு மக்கட்தொகுதியினமும் தத்தமக்குரிய வாழ்க்கை நெறி இயல்களும் செயல்களும் ஆக அமையப்பெறுகின்றனர். இவ்வுண்மை மன்பதை ஆராய்ச்சியாளர்கள் செவ்விதின் ஓர்ந்து கண்டுணர்ந்த உண்மையாகும். அம்முறையில் ஆராய்ந்தால், தமிழ் மக்களின் உயரிய நோக்கங்கள், கொள்கைகள் ஆகியவற்றின் உருவமாக விளங்கும் முருகப் பெருமானின் அருமை பெருமைகளை நாம் அறிந்துணர்ந்து கொண்டு மகிழலாம்.

தொல்காப்பியம் :

முருகன் வழிபாடு தமிழ் நாட்டில் தொன்று தொட்டு நிகழ்ந்து வருகின்றது. மக்கள் முதன்முதல் தோன்றிய இடம் குமரிக்கண்டமே என்றும், அதன் கண்ணும் குறிஞ்சித் திணைப்பகுதியே யாகும் என்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர். இற்றைக்கு மூவாயிரம் ஆண்டுகட்கும் மிக முற்பட்டதெனக் கருதப்படும் தொல்காப்பியம் என்னும் பழந்தமிழ் இலக்கணம், முருகனைக் குறிஞ்சித் திணைக்குரிய தெய்வம் என்று சிறப்புறக் குறிப்பிடுகின்றது. இவ்வாற்ருல் முருகன் வழிபாடு மிகத் தொன்னெடுங்காலம் முதலே, நம் தமிழ்நாட்டில் நிகழ்ந்து வருதல் தெளியப்படும்.

இயற்கைத் தெய்வம் :

முருகன் இயற்கைத் தெய்வம். இயற்கையோடு இயைந்த இன்ப எழில் வாழ்க்கை நடாத்தி வந்த பழந்தமிழ்ப் பெருமக்கள், முருகனை இயற்கையின் வாயிலாக இனிதறிந்தனர். முருகனின் திருவுருவை இயற்கைக் காட்சியின் வாயிலாகக் கண்டு கருதிக் கவினுறப் போற்றிக் களித்தனர். நீலக்கடலில், காலைச் செங்கதிரவன் தோன்றும் அழகிய இனிய காட்சியைக் கண்டு மகிழ்ந்த நம் பழம் பெரும் தமிழ்ச் சான்ருேர்கள், அக்காட்சியின் வாயிலாக, நீல மயில் மீது இவர்ந்து வரும் செந்நிறம் உடைய முருகனை நினைந்துணர்ந்து, மிகப் பழங்காலம் முதலே

வழிபடத் தொடங்கினர் என்பர் அறிஞர். "உலகம் உவப்ப வலன் ஏர்பு திரிதரு பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாங்கு ஓவற இமைக்கும் சேண் விளங்கு அவிர் ஒளி" என்பது திருமுருகாற்றுப்படை.

தமிழ்க்கடவுள் :

முருகன் தமிழ்க் கடவுள். முருகனே தமிழ் மொழியை முதன் முதலில் அகத்தியருக்கு அறிவுறுத்தினன் என்பது வரலாறு. மேலும் சிவ பிரானுக்குப் பிரணவப் பொருளைத் தமிழிலேயே முருகன் உபதேசித் தான்.

> "கொன்றைச் சடையார்க்கு ஒன்றைத் தெரியக்
> கொஞ்சித் தமிழால் பகர்வோனே"

என்பது, அருணகிரிநாதர் திருப்புகழ். கூடல் மாநகரில், ஆலவாய் அவிர் சடைக் கடவுளுடன் குன்றம் எறிந்த குமரவேளும், சங்கம் இருந்து தமிழ் ஆராய்ந்தான் என்பர் நக்கீரர். "சங்கத் தமிழின் தலைமைப் புலவன்" என்பர் குமர குருபர அடிகள். தந்தையாகிய சிவ பெருமானுக்கு முக்கண்கள் உள்ளமைபோல, முருகனாகிய மைந்தனுக் கும் முக்கண்கள் உண்டு என்றும், ஒருமுகத்திற்கு மூன்றாக முருகனின் ஆறு திருமுகங்களுக்குப் பதினெட்டுக் கண்கள் உண்டு என்றும் பெரியோர்கள் கூறுவர். ஆதலின் தமிழ்மொழியின் மெய் எழுத்துக்கள் பதினெட்டும், தன்னுடைய கண்களாகவும்; தமிழில் வல்லினம் மெல்லி னம் இடையினம் என வழங்கும் இனஎழுத்துக்கள் ஆறும் திருமுகங் களாகவும், தமிழின் அகரம் முதலிய உயிர் எழுத்துகள் பன்னிரண்டும் தோள்களாகவும், தனிநிலை எனப்படும் ஆய்தமே, ஒப்புயர்வற்ற நிலையில் தனிச்சிறப்புற்றுத் திகழும் வேலாகவும் கொண்டு, தமிழ்த் தெய்வமாகிய முருகன், தமிழ் வடிவினனாக விளங்குகின்றான்.

> "கண்ணிகர் மெய்யும், சென்னிக் கணம்உறழ் இனத்தின் கூறும்,
> திண்ணிய புயங்க ளேபோல் திகழ்தரும் உயிரும், வேறென்று
> எண்ணிடற் கரிய தாகும் எஃகமும், இயலிற் காட்டும்
> புண்ணிய முருகன் செய்ய பொற்பதம் போற்றி வாழ்வாம்"

என்பது, புலவர் புராணம் பாடிய திருப்புகழ்த் தண்டபாணி சுவாமிகள் அவர்களின் அரிய திருப்பாடல். "முத்தமிழால் வைதாரையும் வாழ் விப்பவன் முருகன்" என்பர் அருணகிரியார்.

பண்புநலங்கள் :

குழந்தைகளுக்குக் குழந்தை வேலன் ஆகவும், இளைஞர்களுக்குப் பாலசுப்பிரமணியன் ஆகவும், கலைஞர்களுக்கு ஆறுமுகம் கொண்ட அண்ணல் ஆகவும் வீரர்களுக்குத் தேவசேனாபதி ஆகவும், மந்திரோப தேசம் பெற விரும்பி வழிபடும் அன்பர்களுக்குச் சுவாமிநாதன் ஆகவும் இல்லற நிலையினர்க்கு வள்ளிதெய்வயானை சமேத சுப்பிரமணியசுவாமி ஆகவும் பற்றற்ற தூய ஞானத்துறவற நிலையினர்க்குப் பழநி யாண்டவர் ஆகவும் பிறவாறும் விளங்கி, அவரவர்களுக்கு ஏற்ற நிலைகளிற் பல்வேறு வகைகளில், முருகப்பெருமான் அருள்புரிந்து, காத்து வருகின்றான்,

கருணைகூர் முகங்கள் :

முருகன் ஆறு திருமுகங்களை யுடையவனாக விளங்குகின்றான். ஒருமுகம் உலகிற்கு ஒளியை நல்குகின்றது. ஒருமுகம் அன்பர்கள் வேண்டுகின்ற வரங்களை யெல்லாம் வழங்குகின்றது. ஒருமுகம் அந்தணர் வேள்வியைப் பாதுகாக்கின்றது. ஒருமுகம் முனிவர்க்கு நூற்பொருளை விளக்குகின்றது. ஒருமுகம் அசுரரை அழித்துக் களவேள்வி புரிகின்றது. ஒருமுகம் உலகில் இல்வாழ்க்கை நிகழ்தற் பொருட்டு வள்ளியம்மையாருடன் நகையமர்கின்றது.

கரங்கள்பன்னிரண்டு :

இந்த ஆறு திருமுகங்களுக்கும் ஏற்ப, முருகனின் பன்னிரண்டு திருக் கைகளும் உலகநலன் கருதிப் பற்பல செயல்களைப் புரிகின்றன. ஒரு கை உயிர்களைச் சூரிய வெப்பத்தினின்று காப்பதற்காக வானத்திற் செல்லுகின்ற தெய்வ முனிவர்களுக்குப் பாதுகாவலாக ஏந்தியது; ஒரு கை இடுப்பிலே வைத்தது; ஒருகை அழகிய தொடைமேலே கிடப்பது;ஒரு கை அங்குசத்தைப் பிடித்தது; ஒரு கை கேடயத்தைத் தாங்குவது; ஒரு கை வேலைச் சுழற்றுகின்றது; ஒருகை மார்பிலே சின்முத்திரையுடன் விளங்குவது; ஒருகை மாலையுடன் அழகுறத் தோன்றுவது; ஒருகை கொடியுடன் மேலே சுழல்கின்றது; ஒருகை மணியை ஒலிக்கின்றது; ஒருகை மேகத்தினின்று மழை பொழிவிக்கின்றது; ஒருகை தேவ மகளிர்க்கு மணமாலையைச் சூட்டுகின்றது. இவ்வாறு முருகனின் பன்னிரு திருக்கைகளும் உலகஉயிர்களுக்கு நலம் விளைவித்து வருகின்றன.

" அருவமும் உருவும் ஆகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள்பன் னிரண்டும் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தனன் உலகம் உய்ய".

— கந்தபுராணம்

கந்தபுராணம் :

முருகனின் வரலாறு கூறும் கந்தபுராணம், உண்மையில் ஆராய்ந் துணர்ந்தால், ஒருவகையில் நமது சொந்த புராணமே யாகும். கந்த புராணத்தில் வரும் சூரபதுமன் சிங்கமுகாசுரன் தாரகாசுரன் என்னும் மூவரும், முறையே ஆணவம், மாயை, கன்மம் என்னும் மும்மலங்களைக் குறிப்பவரே யாவர். தாரகன் கன்ம மலம். சிங்கமுகன் மாயா மலம். சூர பதுமன் ஆணவ மலம். கன்ம மலம் முதலில் அழியும். ஆதலின் தாரகா சுரன் முதலில் இறந்தான். மாயா மலம் அறிவை விளக்கும், ஒரோ வழி மயக்கமும் செய்யும். அம்முறையில் சிங்கமுகாசுரன் நல்லியல்பும் தீய இயல்பும் ஒருசேரக் கொண்டிருந்தான். ஆணவ மலம் மறைப்பாற்றல் (ஆவாரக சக்தி), இழிப்பு ஆற்றல் (அதோநியாமிகா சக்தி) என்னும் இருதிற ஆற்றல்கள் உடையது. அவ்வாறே சூரபதுமனும், மனிதவுட லும் குதிரைத்தலையும் கொண்டு, சூரன்-பதுமன் என இருவேறு உடல் கள் ஒன்றி நின்றான். ஆணவ மலம் ஆற்றல் கெடுமே யன்றி, என்றும்

அழிவதில்லை என்பது சைவசித்தாந்தம். அம்முறையில், சூரபதுமன் தன் தீய இயல்புகள் அழிந்து, சேவலும் மயிலுமாக முருகனுக்குத் தொண்டு பூண்டு, என்றும் அழியாத பெரு நிலைபெற்றான். அஞ்ஞானத்தை ஞானமே வெல்லும். சூரபதுமனாகிய அஞ்ஞானப் பிழம்பை, மெய்ஞ் ஞானமாகிய வேற்படை வென்றது. முருகனுக்கு வேல் ஞான சக்தி; வள்ளி அம்மை இச்சா சக்தி; தெய்வயானை கிரியா சக்தி; முருகனின் மயில் விந்து தத்துவம், கோழி நாத தத்துவம் என்னும் உண்மைகளைக் கந்தபுராணம் கவினுற விளக்குகின்றது.

முடிவுரை :

முருகனை அன்புடன் வழிபட்டு, முருகா முருகா எனப் பலகாலும் கூறித் தியானிப்பவர்கள், என்றும் குறையாத பெருஞ் செல்வத்தைப் பெறுவார்கள்; அவர்களை ஒருபோதும் எத்தகைய துன்பமும் அணுகாது, அவர்களுக்கு எந்த ஒரு நோயும் வராது. அவர்கள் சுற்றமும் சூழ; உயர்ந்த இன்பங்களை நுகர்ந்து கொண்டு நீடூழி காலம் வாழ்வார்கள்.

"முருகா எனஉனை ஓதும் தவத்தினர் மூதுலகில்
அருகாத செல்வம் அடைவார்; வியாதி அடைந்து [நையார்
ஒருகால மும்துன்பம் எய்தார் பரகதி உற்றிடுவார்
பொருகாலன் நாடு புகார்; சமரா புரிப் புண்ணியனே."

---




## ஏத்த வல்லவாறே வந்து நல்காய்

[வித்துவான் திரு. க. வெள்ளைவாரணனர்]

ஒல்லையாறி யுள்ள மொன்றிக் கள்ளமொழிந்து வெய்ய
சொல்லையாறித் தூய்மை செய்து காம வினையகற்றி
நல்லவாறே யுன்றனும நாவினவின் றேத்த
வல்லவாறே வந்து நல்காய் வலிவல மேயவனே.

இத்திருப்பாடல் திருஞானசம்பந்தப் பிள்ளையார் சோழநாட்டில் திருவலிவலம் என்ற தலத்தில் கோயில் கொண்டு வீற்றிருந்தருளும் இறைவன் திருமுன் நின்று பரவிப் போற்றிய திருப்பதிகத்தின் முதற் பாடலாகும்.

(இ—ள்) திருவலிவலம் என்னும் திருத்தலத்தில் விரும்பி எழுந்தருளிய பெருமானே! என் மனமானது பொறிவாயிலாகப் புறத்தே செல்லும் வேகம் அடங்கி ஒருமுகப்பட்டு ஒன்றி நின்று வஞ்சனை முதலிய மாசு நீங்கிக் கடுஞ்சொல்லை அகற்றித் தூய்மையுடையதாய்க் காமம் முதலிய தீச்செயல்களைக் கடிந்து நன்னெறியில் நின்று உன்னுடைய திருப்பெயரை நாவிற் பலமுறை சொல்லித் துதிக்கவல்ல நன்னெறியாகிய பத்திநெறியினையே அடியேற்கு எளிவந்து அருள் புரிவாயாக என்பதாம்.

இறைவன் திருமுன் நின்று அம்முதல்வனை முன்னிலைப்படுத்து அழைத்துப் போற்றும் முறையில் பாடப்பெற்ற பாடலை முன்னிலைப் பரவல் எனவும், இறைவனைப் படர்க்கையில் வைத்துப் போற்றும் பாடலைப் படர்க்கைப் பரவல் எனவும் வழங்குதல் மரபு. இறைவனைச் சேய்மையிடத்தவனாக வைத்துப் போற்றும் படர்க்கைப் பரவலைவிட அம்முதல்வனை தனக்கு முன்னே எழுந்தருளி அருள் சுரக்கும் நிலையில் அண்மையில் அழைத்துப் போற்றும் முன்னிலைப் பரவலாக அமைந்த திருப்பாடல்கள், தம்குறைகளை இறைவன் முன்னிலையில் எடுத்துரைத்து முறையிடுவார்க்கு மிகவும் பயனளிப்பனவாகும். அம்முறையில் திருஞானசம்பந்தர் திருவலிவலத்திறைவராகிய மனத்துணைநாதர் முன்னிலையில் நின்று முன்னிலைப்படுத்தி அழைத்துத் தம்குறைகளைச் சொல்லி முறையிடும் நிலையில் அமைந்த இத்திருப்பாடல், மக்கள் இறைவன் முன்னிலையில் நின்று அம்முதல்வனை அழைத்துத் தம்முடைய குறைகளையெடுத்துக்கூறி நெஞ்சம் நெகிழ்ந்துருகிப் போற்றுதற்குரிய சிறப்புடைய தோத்திரமாக அமைந்துளது.

உலக வாழ்க்கையில் உழலும் மாந்தர்களது உள்ளம் நாள்தோறும் அனுபவித்தற்குரிய நுகர்பொருள்களில் வைத்த பற்றுக் காரணமாக ஒரு நிலையில் நில்லாது எங்கும் விரைந்து பரந்து திரியும் வேகமுடையதா தலைக் காண்கின்றோம். இவ்வாறு பரபரப்புடையதாய் நொடிப்பொழுது கூட ஒரு நிலையில் நில்லாது ஐம்புலன் வழித்திரியும் மனத்தினது வேகம் அடங்கினாலன்றி இறைவனை ஒன்றியிருந்து நினைக்கும் ஒருமை நிலையினை நாம் பெறுதல் இயலாது. நமது மனம் ஐம்பொறி வழியாகப் புறத்தே செல்லாது அகத்தே ஒன்றியிருந்து இறைவனைப் போற்றும் நிலையினை அடைய வேண்டுமானால் ஐம்புலன்வழிப் பரந்து திரியும் அதனது வேகம் அடங்கப்பெறுதல் வேண்டும். இக்கருத்தினை அறி வுறுத்த 'ஒல்லை ஆறி' என்றார். ஒல்லை—விரைவு; வேகம். ஆறுதல்—அடங்குதல். இறைவன் இத்தகைய மனத்தின் வேகத்தைத் தணித்துத் தம்மை ஆண்டு கொண்டருளிய திறத்தை 'வேகங்கெடுத்தாண்ட வேந் தனடி வெல்க' எனவரும் தொடரில் மணிவாசகப் பெருமான் உளமுருகிப் போற்றியுள்ளமை இங்கு நினைக்கத் தக்கதாகும். மனத்தின் வேகம் அடங்கினால்தான் ஒன்றியிருந்து இறைவனை நினைக்குந்திறம் அதற்கு உளதாகும் என்பார் ஒல்லையாறி 'உள்ளம் ஒன்றி' என்றார். 'ஒன்றி யிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனமில்லை' என்பது அப்பர் அருள் மொழி. இறைவனை நினைந்து போற்றவேண்டுமாயின் நினைதற்குக் கருவியாகிய உள்ளமானது அழுக்காறு அவா வெகுளி ஆகிய மனக் குற்றங்களையும் அவற்றோடு தொடர்புடைய வாக்கின் குற்றமாகிய கடுஞ் சொல்லையும் அடியோடகற்றுதல் இன்றியமையாதது என்பார் 'கள்ளம் ஒழிந்து வெய்ய சொல்லையாறித் தூய்மை செய்து' என்றார். கள்ளம் வஞ்சனை: அழுக்காறு, அவா, வெகுளி முதலிய மனக்குற்றம். வெய்ய சொல்—கடுஞ்சொல். ஆறுதல்—தணிதல்; இறைவனை வழிபடுவதற்கு மனமொழிகள் தூய்மை பெறுவதுடன் உடம்பினாற் செய்யப்படும் வினைகளும் காமம் முதலிய மாசின்றித் தூய்மையுடையதாதல் வேண்டும் என்பார் 'காமவினையகற்றி' என்றார். காமவினை—காமமாகிய குற்றத்தின் வழி நிகழும் செயல். இவ்வாறு மனமொழிமெய்களாகிய முக்கரணங்களாலும் தூய்மையுடையவர்களே இறைவனது திருப் பெயரை நன்முறையில் தமது நாவிற்கொண்டு ஏத்துதற்கு மிகவும் தகுதி யுடையவர் என்பார் 'நல்லவாறே யுன்றன் நாமம் நாவில் நவின்றேத்த' என்றார். இவ்வாறு மனம் பொறிவழியே புறத்துச் செல்லாது மடங்கி ஒருமுகப்பட்டு அடங்குதற்கும் மனமொழிமெய்களாகிய முக்கரணங் களும் தூய்மைபெற்று இறைவன் திருப்பெயரை நாவிற் பன்முறை பயின்று போற்றுதற்கும் உரிய வல்லமையினை இறைவனது திரு வருளின் துணையின்றி நம்மனோர் பெறுதல் இயலாது என்பதனை எண்ணிய ஞானசம்பந்தர் இறைவனை நோக்கி, "நின்னை உணர்ந்து போற்றித் துதித்தற்கும் நின்திருவருளையே வேண்டி நிற்கின்றோம் ஆதலின் பேரருளாளனாகிய நீயே என்போன்றோர்க்கு எளிவந்து முன்னின்று அருள்புரிதல் வேண்டும்" என வேண்டும் முறையில்

'நல்லவாறே யுன்றன் நாமம் நாவில் நவின்று ஏத்த
வல்லவாறே வந்துநல்காய் வலிவல மேயவனே"

என வலிவலத்துறையும் மனத்துணைநாதரை முன்னின்று பரவிப் போற்றினர்.

நல்லவாறே -நல்லநெறியில், நவிலுதல்—பலமுறை சொல்லுதல். ஏத்தவல்ல ஆறு—ஏத்துதற்குரிய வல்லமையைத் தரும் நெறி; என்றது பத்திநெறியை. 'வாழியர்க்கே வழுவாநெறி காட்டி' என்பது ஆரூரர் அருளுரை.

திருவலிவலத் திருக்கோயிலில் மனத்துணைநாதர் திருமுன்னின்று முன்னிலைப்படுத்துப் போற்றும் முறையில் திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருவாய்மலர்ந்தருளிய இத்திருப்பாடல் எல்லாம் வல்ல இறைவனை முன்னிலைப்படுத்துப் போற்றுதற்குரிய தகுதியினை அன்பர்கள் அடைவதற்கு வேண்டிய நெறிமுறைகளையும் அங்ஙனம் போற்றுதற்குரிய தகுதியினைத் தம் முயற்சியினால் மட்டுமன்றி இறைவனது திருவருளாலேயே எளிதிற்பெறமுடியும் என்பதனையும் நன்கு அறிவுறுத்தும் முறையில் அமைந்திருத்தல் காணலாம். திருவலிவலத்தில் ஆளுடைய பிள்ளையார் பாடியருளிய இத்திருப்பதிகத்திருப்பாடல் அவர்காலத்திற்குப் பின் திருவலிவலத்தில் இறைவனை வழிபடவந்த சுந்தரமூர்த்தி சுவாமிகளது உள்ளத்தை மிகவும் கவர்ந்துள்ளது என்பதும், நல்லிசை ஞான சம்பந்தர் பாடியருளிய திருப்பதிகங்களையும் நாவுக்கரசர் பாடியருளிய திருப்பதிகங்களையும் இன்னிசையுடன் இறைவன் முன்னிலையிற் பாடிப் போற்றும் பழக்கமுடைய ஞானசம்பந்தர் பாடியருளிய 'ஒல்லையாறி' என்னும் முதற்குறிப்புடைய திருப்பதிகத்தினைச் சிறப்பாக இறைவன் முன்னிலையிற் பலமுறை பாடிப்போற்றி இறைவன் திருவருளில் திளைத்து மகிழ்ந்தனர் என்பதும்

'நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக்கரசரும்
பாடிய நற்றமிழ்மாலை
சொல்லியவே சொல்லி யேத்துகப்பானைத்
தொண்டனேன் அறியாமையறிந்து
கல்லியல் மனத்தைக் கசிவித்துக்
கழலடி காட்டியென் களைகளையறுக்கும்
வல்லியல் வானவர் வணங்க நின்றானை
வலிவலந் தனில் வந்து கண்டேனே'

எனத்தமது அநுபவத்தினை நம்பியாரூரர் வெளியிட்டு மகிழ்தலால் இனிது விளங்கும். ஆரூரர் பாடிய இத்திருப்பாடலில்

'கல்லியல் மனத்தைக் கசிவித்துக்
கழலடி காட்டி என்களைகளையறுக்கும்'

என்ற தொடரில் ஞானசம்பந்தர் வலிவலப்பெருமானை முன்னிலைப் படுத்து வேண்டிய 'ஒல்லையாறி யுள்ளமொன்றி' எனவரும் திருப்பாடலின் பயனை வலிவலத்திறைவர் நம்பியாரூரர்க்கு நல்கியருளிய திறம் இனிது புலனாதல் காணலாம்.




## தம்பிரான் தோழர்

[திரு. க. கலியாணம், எம்.ஏ.,]

இந்திய நாடு சுதந்திரம் பெற்று இருபத்தைந்து ஆண்டுகள் ஆகின்றன. 15-8-1972 அன்று வெள்ளி விழாக் கொண்டாட இருக்கின்ருேம். அதே நாளில் சைவ சமயாசாரியர்களில் ஒருவரான சுந்தர மூர்த்தி சுவாமிகளின் திருநட்சத்திரமான ஆடிச்சுவாதி வருகின்றது. அந்த நாளில் அவரை நினைத்து வழிபடுவது நம் தலையாய கடமையல்லவா? பெரியோர்கள் வாழ்க்கையை நினைவுபடுத்திக் கொண்டால் நம் வாழ்க்கை உயர் நிலையடையும். (Lives of greatmen all remind us that we can make our lives sublime).

அறந்தருநாவுக்கரசும் ஆலாலசுந்தரரும் பிறந்தருளிய நன்னுடு நடு நாடு. வில்லிபாரதத்தின் சிறப்புப்பாயிரத்தில் "மூவரில் பிறந்த பொன்னுடு" என்று வரந்தருவார் போற்றியுள்ளார். அதன் ஒரு பகுதி திருமுனைப்பாடிநாடு. அத்திருநாட்டின் திருநாவலூரில் சடையனுருக்கும் இசை ஞானியாருக்கும் 'தீதகன்று உலகம் உய்யத் திருஅவதாரம் செய்தார்' சுந்தரர். அவருக்கு நம்பியாரூரர் என்றே பெயரிட்டனர். சேக்கிழாரின் பெரியபுராணத்தில் சுந்தரர் என்ற பெயரே காணப்படவில்லை. தேவாரப் பாடல்களில் தம்மை ஆரூரன், நாவலூரன், ஊரன், வன்ருெண்டன் என்றே கூறிக்கொள்கிருர். திருவொற்றியூர்க் கோயிலிலுள்ள இரண்டாம் இராஜராஜ சோழன் கல்வெட்டொன்றில் 'ஆளுடைய நம்பிகள்' என்றே பெயர் காணப்படுகிறது. எனவே சுந்தரர் என்ற பெயர் பிற்காலத்தில் ஏற்பட்டது என்று தெரிகிறது.

உரியகாலத்தில் கல்விபயின்ருர். 'அளவில் தொல்கலைகள் ஆய்ந்தார்', 'நுணங்கியகேள்விமேலோன்' என்று சேக்கிழார் போற்றுகிருர். 'அவர் மாசிலா மரபில் வந்த வள்ளல்'. நரசிங்கமுனையர் என்ற அரசர் வளர்த்தார். சடங்கவியார் பெண்ணை மணம் செய்து கொள்ள இருந்த சுந்தரரை இறைவன் தடுத்து ஆட்கொண்டார். ஆதிசைவவேதியரான அவர் பின்னர் பரவையார் என்ற கணிகை மாதையும், சங்கிலியார் என்ற வேளாளப் பெண்ணையும் மணம் புரிந்து கொண்டார்.

அவர் வாழ்க்கையின் பல அனுபவங்களை அவருடைய பாடல்களில் காணலாம். அவர் வரலாற்று நிகழ்ச்சிகளுக்கு நிறைய அகச்சான்று

கள் உள்ளன. இறைவன் அவரை ஓலைகாட்டி ஆட்கொண்டது, திருவடி தீட்சை செய்தது, பரவையாரிடம் தோழனைத் தூது சென்றது, அவர் சங்கிலியாரை மணம் புணர்ந்தது, கண் இழந்தது, ஊன்று கோல் பெற்றது, கண் பார்வை மீண்டது, திருமுருகன் பூண்டியில் பொருளைப் பறிகொடுத்துத் திரும்ப அடைந்தது, பொன்னை ஆற்றில் போட்டுக் குளத்தில் எடுத்தது, முதலை வாயிருந்து மதலையை அழைத்தது, குண்டையூரில் நெல் பெற்றது, பல நாயன்மார்களின் திறம் கூறியது, வெள்ளானையில் கயிலாயம் சென்றது முதலிய எல்லாவற்றிற்கும் அவர் பாடல்களில் அகச் சான்றுகள் இருக்கின்றன.

சைவசமயத்திற்கு அவர் ஆற்றியருளிய பெருந்தொண்டு அவர் பாடிய திருத்தொண்டத் தொகையாகும். அதில் அவருக்குமுன்பிருந்த நாயன்மார்களைப் பற்றியெல்லாம் தொகுத்துக் கூறியிருக்கிறார். அதைக் கொண்டு, நம்பியாண்டார் நம்பிகள் 'திருத்தொண்டார் திருவந்தாதி' பாடினார். அவைகளின் அடிப்படையிலேதான் சேக்கிழார் பெருமான் 'திருத்தொண்டர் புராணம்' என்னும் பெருங்காப்பியத்தை எழுப்பினார். அதற்காக, தன்பிறப்புக்கே வணக்கம் கூறுகிறார். "தேசம் உய்யத்திருத் தொண்டத் தொகை முன் பணித்த திருவாளன் வாசமலர் மென்கழல் வணங்க வந்த பிறப்பை வணங்குவாம்" என்பது அவருடைய திரு வாக்கு. பெரிய புராணத்திற்குச் சுந்தரரைக் காவியத் தலைவர் ஆக்கினார். அதில் திருமலைச் சிறப்பு, தடுத்தாட் கொண்ட புராணம், ஏயர்கோன் கலிக்காமர் புராணம், கழறிற்றறிவார் புராணம், வெள்ளானைச் சருக்கம் முதலிய இடங்களில் அவர் வரலாற்றைக் கூறியிருக்கிறார். ஒவ்வொரு சருக்கத்தின் இறுதியிலும் சுந்தரர் புகழ்ப்பாடல் இடம் பெறுகிறது. "சைவ முதல் திருத்தொண்டர் தம்பிரான் தோழனார் நம்பி", "மூலமான திருத்தொண்டத் தொகைக்கு முதல்வராயிந்த ஞால முய்ய எழுந்தரு ளும் நம்பிதம்பிரான் தோழர்" என்ற சேக்கிழார் வாக்குகளினால் சுந்தரரைக் காவியத் தலைவர் என்பதை உறுதிப்படுத்தலாம்.

சைவசித்தாந்த சாத்திரத்தில் இறைவனை அடைய நான்கு வழிகள் கூறப்பெற்றிருக்கிறது. அவை, சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. அவற்றை சைவசமயாசாரியர் நால்வர் வாழ்க்கையிலும் இணைத்துக் கூறுவர் ஆன்றோர். அவை தாசமார்க்கம், சற்புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்பவை. கடவுளைத் தலைவனாக வும் தன்னை அடிமையாகவும் நினைத்து வழிபடுவது தாசமார்க்கம். இதை அப்பர் வாழ்கையில் பார்க்கலாம். இறைவனைத் தந்தையாகவும் தன்னை மகனாகவும் கொண்டு வழிபடுவது சற்புத்திர மார்க்கம். இதற்குச் சம்பந்தர் வாழ்க்கை எடுத்துக்காட்டு. ஆண்டவனும் தானும் தோழனும் தோழனுமாக எண்ணித் தொழுவது சகமார்க்கம். சுந்தரர் வரலாறு இதற்குச் சான்று பகரும். பெருமானைக் குருவாகவும் தான் சீடனாகவும் நினைந்து வணங்குவது சன்மார்க்கம். இதை மாணிக்கவாசகர் வாழ்க்கையில் காண்கிறோம்.

காலத்தால் அரிய செயல் செய்த பெரியாரைப் போற்றும் போது அவர் நண்பர், ஆசான், வழிகாட்டி (Friend, Philosopher and guide) ஆக இருந்தார் என்று சொல்வதுண்டு. இறைவன் சுந்தரமூர்த்தி சுவாமி களிடத்தில இந்த மூன்று வகையாகவும் அருள் பாலித்தார். இவை பற்றித் தனித் தனியே விரித்துரைத்தால் பெருகும். வாக்குறுதியில் தவறிய சுந்தரரைக் கண் ஒளி மறைப்பித்துத் தண்டித்தார். சுந்தரர் தன் தவற்றை நினைத்து வருந்தி வருந்திப் பாடிய பின் அவருக்கு இறைவன் கண்ணொளி வழங்கினர்.

இறைவனுடன் தாம் தோழமை நெறியில் நின்றார் என்பதை, “ஏழிசையாய் இசைப்பயனாய் என்னுடைய தோழனுமாய்” என்றும், “அடியேற் கெளிவந்த தூதனைத் தன்னைத் தோழமையருளித் தொண்ட னேன் செய்த துரிசுகள்பொறுக்கு நாதனை” என்றும் விதந்து பேசுகிறார். தோழமை உரிமையுடன் பாடும் இடங்கள் இன்பம் பயப்பன. அவற்றில் சில கீழே காணலாம்:—

“பேசினபேச்சைப் பொறுத்திலராகில் இவர் அலாது இல்லையோ பிரானார்”.

“எற்றுக்கடிகேள் என்கண் கொண்டீர் நீரே பழிபட்டீர், மற்றைக் கண் தான் தாரா தொழிந்தால் வாழ்ந்து போதீரே.”

“எங்கே போவேனாயிடினும் அங்கே வந்து என் மனத்தீராய்ச் சங்கையொன்று மின்றியே தலைநாள் கடை நாள் ஒக்கவே.“

இனி, ஆளுடைய நம்பிகள் ஒரு தெய்வவழிபாட்டைக் கொண்டவர் என்பதைப் பலபாடல்களில் சொல்கிறார். ‘அன்னே உன்னையல்லால் இனியாரை நினைக்கேனே’, ‘மீளா அடிமை உமக்கே ஆளாய்ப் பிறரை வேண்டாதே’, ‘விரும்பேன் உன்னையல்லால் ஒரு தெய்வம் என் மனத் தால்’, ‘மற்றுத்தேவரை நினைந்துனை மறவேன்’ என்பன போன்றவை காண்க.

சுந்தரமூர்த்தி சுவாமிகளின் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் அவரு டைய தேவாரப் பாடல்களிலிருந்து நாம் அறிந்து கொள்ள வேண்டியவை சிவனடி மறவாமை, பிறர் துயரம் காணப் பொருத பெருந் தகைமை, தவற்றை நினைத்து வருந்தின் மன்னிப்பு வாய்க்கும் தன்மை, ஒரு தெய்வ வழிபாடு, சாதி குலபேதமின்மை, அடியார் வணக்கம் முதலியன. இவர் அருளிய தேவாரப் பாடல்களைப் பல்கால் பயின்று அவர் கூறியுள்ள அருளுரைகளை மனத்தில் கொண்டு, அவர் அடிச் சுவட்டில் நின்று, இறைவனை வழிபட்டு உட்லெடுத்த பெரும் பயனைப் பெற்று உய்வோமாக.

“பித்தரிறை என்றறிந்து பேதைபால் தூது அனுப்புவித்த தமிழ்ச் சமர்த்தர் மெய்புகழ்வதெந் நாளோ”

—தாயுமானவர்.



# அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்
# எட்டிகுடி

## தஞ்சை மாவட்டம்.



முருகன் திருத்தலங்களுள் மிகவும் சிறப்புடையது. அருணகிரி நாதரால் திருப்புகழ் பாடல் பெற்றது. தல விருட்சம்-எட்டி மரம். இத் திருக்கோயிலில் ஒவ்வொரு கார்த்திகையும் மிகவும் விசேஷமானது. சித்திரா பவுர்ணமியன்று பல்லாயிரக்கணக் கான காவடிகள் வரும் காட்சி காணத்தகுந்தது. ஏராளமான திருமணங்கள் இத்திருக்கோயிலில் நடைபெறுகின்றன. திரு மண மண்டபம், ஓய்வு விடுதி முதலிய பலவசதிகள் வழிபடு வோர்களுக்காகச் செய்யப்பட்டுள்ளது. திருவாரூர், நாகப்பட் டினம், திருத்துறைப்பூண்டி ஆகிய இடங்களிலிருந்து பஸ் வசதி உண்டு.

அன்பர்கள் வருக!

முருகன் அருள் பெறுக!!

G. சோமசுந்தரம், பி.எஸ்.ஸி.,
நிர்வாக அதிகாரி.



## நம்மாழ்வார்

[வித்துவான் திரு. கே.ஏ. மணவாளன், பி.ஏ., பி.ஓ.எல்.,]

திருவழுதி நாடென்றுந் தென்குருகூ ரென்றும்
மருவினிய வண்பொருந லென்றும்-அருமறைகள்
அந்தாதி செய்தா னடியிணையை யெப்பொழுதுஞ்
சிந்தியாய் நெஞ்சே தெளிந்து.

தென் பாண்டி நாட்டில் தாமிரவருணி என்று வழங்கும் பொருநல் ஆற்றங்கரையில் ஆழ்வார் திருநகரி என வழங்கும் திருக்குருகூர் உள்ளது. அவ்வூரை ஏழுதலைமுறையிலும் பழிப்பில்லாமல், தொண்டர் குலத்தில் வேளாண்மரபில் தோன்றிய திருவழுதிவளநாடர் என்பவர் ஆட்சி புரிந்து வந்தார். அவருக்குப் பின்பு அவர் மரபினர்களான செந்தாமரைக் கண்ணர், செங்கண்ணர், பொற்காரி என்னும் அந்தமிழ்ப் பெயர்களுடைய அரசர்கள் ஆண்டு வந்தனர். அவர்களில் பொற்காரி என்பவர் தம்மகனுரான காரி என்பவர்க்குத் திருமணம் செய்யவேண்டித் திருவண்பரிசாரம் என்னும் திருப்பதியை அடைந்தார். அங்கு எல்லா வற்ருலும் தமக்குச் சமமாக வாழ்ந்து வருகின்ற திருமாலடியாரான திருவாழ்மார்பர் என்பவருடைய மகளான உடையநங்கையைத் தம் மகனுக்குத் திருமணம் செய்வித்துத் தம்மூருக்கு அழைத்து வந்தார். காரியாரும் உடைய நங்கையாரும் திருக்குருகூரில் சில ஆண்டுகள் இன்பமாக வாழ்ந்துவரும் நாளில் உடையநங்கையார் தாய் வீட்டுக்குச் சென்றுவர அனுமதிவேண்டித் திருவண்பரிசாரத்துக்குக் கணவனுடனே சென்ருர். அங்குச் சில திங்களிருந்து பின்பு ‘தேன் கொள் சோலைத் திருக்குறுங்குடி’க்குச் சென்று அங்குள்ள கோயிலில் நம்பியை வணங்கித் தங்களுக்குப் பிள்ளை வரம் வேண்டுமென்று இறைஞ்ச, அவ்வெம் பெருமானும் ‘உமக்கு நாமே மகனுகப் பிறப்போம்’ என்று கூறி வாழ்த்தி யருளினன். அதற்குப் பிறகு காரியாரும் நங்கையாரும் மிகவும் மகிழ்ந்து திருக்குருகூருக்கு எழுந்தருளி இனிதே வாழ்ந்து வரும் நாளில் உடைய நங்கையாரும் கருவுற்ருர். பின்பு, பத்துத் திங்களும் கழிந்தவாறே வைகாசி மாத விசாக நன்னுளில் பௌர்ணமி திதியில் நம்மாழ்வார் என்கிற சடகோபர் அவதரித்தார்.

இவ்விதம் அவதரித்த நம்மாழ்வார் உலகிலுள்ள மற்றக் குழந்தை களைப் போல் அழாமலும், கண்திறவாமலும், தம்முடைய திருவாயால் முத்தனைய முறுவல் செய்யாமலும்’ மூக்குறிஞ்சி முலையுண்ணமலும் இருப்பதைப் பார்த்து எல்லோரும் வியந்து யாது நிகழுமோ என்று

அஞ்சினர். பன்னிரண்டாவது நாளில் காரியாரும் உடையநங்கையாரும் திருச்சங்கணித்துறையையுடைத்தான பொருநல் நதிக்கரையில், பக்தர்களுடைய துன்பத்தைப் போக்கி ஆட்கொள்ளும் பெருமானுன பொலிந்து நின்ற பிரான் கோயிலிலுள்ள திருப்புளியமரத்தடியில் பொன்னுல் செய்த வண்ணச் சிறு தொட்டிலில் அக்குழந்தையைக் கிடத்தி 'மாறன்' என்னும் பெயரையும் சாத்தி மகிழ்ந்தனர். சில நாட்கள் சென்றவாறே அக்குழந்தை கட்டிலினின்றும் இறங்கித் தவழ்ந்து சென்று திருப்புளியாழ்வார் என்று கொண்டாடப்படும் அப்புளியமரத்தடியில் பத்மாசனமிட்டுக் கொண்டு ஞானமுத்திரை தரித்து தவயோகத்தில் ஆழ்ந்து விட்டது. காரியாரும் உடையநங்கையாரும் இவ்வதிசயத்தைக் கண்டு நம்மாழ்வாரைச் சாதாரணக் குழந்தை என்று கருதாமல் தங்கள் குல தெய்வமாகவே கருதி வணங்கத் தலைப்பட்டனர்.

இவ்விதம் நம்மாழ்வார் பதினறு ஆண்டுகள் வரை திருப்புளிய மரத்தடியில் மௌன நிலையில் 'அவன் முகத்தன்றி விழியேன்' என்று மூடிய கண்களையுடையவராய்க் கண்ணன் திருவடிகளையே நினைந்து உருகித் தவமியற்றிய அளவில் இறைவனே வந்து காட்சிதந்து மிகவும் உயர்ந்த தான திராவிட வேதமாகிற தமிழ்மறையை அவருக்கு உபதேசித்தருளினுன். பின்பு நம்மாழ்வார் இறைவனுவடய குணக்கடலில் மூழ்கி ஆரிய மொழியிலுள்ள நான்மறைகளையும் தமிழிலே திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்னும் பெயர்களில் நூல்களாக அருளினுர். அம்பொழுது அங்குவந்து சரணடைந்த மதுரகவி ஆழ்வாருக்கு அப்பிரபந்தங்களை உபதேசித்தருளி "உண்ணும்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்" என்று எண்ணித் தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன் மாலைகள் சொல்லித்தமது முப்பத்தைந்தாவது வயதில் அவாவற்று வீடு பெற்றருளினுர்.

நம்மாழ்வாருடைய திருவாய்மொழியின் பெருமையைச் சங்கப்புலவர்கள் உட்பட பலரும் போற்றிக்கொண்டாடிய செய்திகள், பழைய வைணவ நூல்களிலே மிகுதியாகக் காணப்படுகின்றன. கம்பர் தாமியற்றிய இராமயணத்தைத் திருவரங்கத்தில் அரங்கேற்ற நினைத்த காலத்தில் அரங்கன் அசரீரி ஒலியில் 'கம்பா! நீ நம் சடகோபனைப் பாடினையோ' என்று கேட்டு ஆழ்வார் பெருமையையும் அவர் தம் திருவாய்மொழியின் சுவையையும் நாடும் நகரமும் அறியப் பாடினுல் தான் நாம் உமது இராமாயணத்தைச் செவிமடுப்போம் என்று கூறிவிட்டான். கம்பநாடரும் ஆழ்வாரைப் பற்றிச் 'சடகோபரந்தாதி' என்று நூறு கட்டளைக் கலித்துறைப்பாவில் ஓர் அந்தாதிநூலைப்பாடினுர். அந்நூலின் முதற்பாவில் திருமாலாகிய நாராயணன் ஆரிய வேதத்தைக் கடந்தாலும் கடக்கலாம், உண்மை நிலைகண்ட பிரமன் முதலானவர்களுடைய குற்றமற்ற ஞானத்தைக் கடந்தாலும் கடக்கலாம், ஆனுல் தென் திசையின் கண் விளங்கும் தாமிரவருணி ஆற்றங்கரையிலுள்ள திருக்குருகூரில் தோன்றிய எங்கள் சடகோபனுகிய நமமாழ்வார் அருளிச் செய்த திருவாய்மொழியின் ஒருவரியைக் கடந்து செல்ல முடியுமோ?

முடியாது என்று திருவாய்மொழியின் பெருமையைப் புகழ்ந்து பேசியுள்ளார். அதாவது எல்லாவற்றையும் கடந்து நிற்கும் இறைவன் தமிழ் மறையாகிய திருவாய்மொழியைக் கடக்க முடியாமல் தமிழ் மறையாகவே விளங்குகின்ருனென்பதாம்.

வேதத்தின் முன்செல்க; மெய்யுணர்ந்தோர் விரிஞ் சன்முதலோர்
கோதற்ற ஞானக் கொழுந்தின்முன் செல்க; குணங்கடந்த
போதக் கடலெங்கள் தென்குரு கூர்ப்புனி தன் கவியோர்
பாதத்தின் முன்செல்லு மோதொல்லை மூலப் பரஞ்சுடரே ?

என்பதே கம்பர் பெருமான் பாடிய அந்தச் சடகோபரந்தாதிப் பாடலாகும்.

நம்மாழ்வாருடைய திருவாய்மொழியில் ஒன்ருன 'கண்ணன் கழலிணைகள் நண்ணும் மனமுடையீர்' என்ற பாட்டைச் சங்கப் பலகையேற்ற பெருமையைக் கண்டு வியந்த தமிழ்ப் புலவர்கள்

'சேமம் குருகையோ செய்யதிருப் பாற்கடலோ
நாமம் பராங்குசமோ நாரணமோ—தாமம்
துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கும்
உளவோ பெருமான் உனக்கு'

என்று போற்றியுள்ளனர். மேலும் அப்புலவர்கள்

'ஈயாடுவதோ கருடற்கெதிரே இரவிக்கெதிர் மின்மினியாடுவதோ
நாயாடுவதோ உருவெம்புலிமுன் நரியாடுவதோ நரகேசரிமுன்
பேயாடுவதோ வழகூர்வசிமுன் பெருமாள்வகுளா பரணனருள் கூர்ந்து]
ஓவாதுரையா யிரமாமறையி னொரு சொற் பொறுமோ உலகிற் கவியே'

என்று கருடனுக்கு எதிராக ஈயாட முடியுமோ அல்லது சூரியனுக்கு எதிராக மின்மினிப் பூச்சிதான் ஒளிவிட்டு ஆடமுடியுமோ என்று பலவாறு கேள்விகளைக் கேட்டுத்திருவாய் மொழியின் பெருமையையும் ஆழ்வாரின் ஏற்றத்தையும் போற்றியுள்ளனர். இதைத் தவிர அக்காலத்தில் நடந்த அதிசய நிகழ்ச்சியொன்று ஆழ்வார் அவதரித்த அத்திருநகரியின் பெருமையை நன்ருக விளக்கியுள்ளது.

ஒருகாலத்தில் தாமிரவருணி ஆற்றின் வடக்குக்கரையில் வசித்து வந்த யோகி ஒருவர் நாயொன்றை வளர்த்து வந்தார். அந்த நாய் நாள்தோறும் தென்கரையிலுள்ள ஆழ்வார் திருநகரிக்குச் சென்று அங்கு வசிக்கும் வைணவத் தொண்டர்கள் உண்டு உமிழ்ந்த எச்சில் பிரசாதத்தைத் தின்று வயிற்றை நிரப்பிக்கொண்டு வருவது வழக்கமாக இருந்தது. அவ்வழக்கப்படி ஒருநாள் போய்த் திரும்பிவர நேரப்பட்டதனுல் யோகியானவர் நாய் இன்னும் வரவில்லையே என்று ஆற்ருேரத்தில் வந்துபார்க்கும் பொழுது அந்நாய் நட்டாற்றில் வருகையில் எதிர்பாராது வந்த வெள்ளத்தில் நீந்திக் காலோய்ந்து போய் நீரில் அமிழ்ந்து கிளம்பிற்று. அப்பொழுது அந்நாயின் கபாலம் வெடித்து

நாயின் ஆன்ம சோதியானது மண்டை வழியாக மேலே கிளம்பிப் பேரொளியை உண்டாக்கிக் கொண்டு சென்றது. அதைப் பார்த்த யோகியார் தாம் இவ்வளவு காலம் தவமியற்றியும் பெருத அப்பேற்றை அசேதனமாகிய அந்நாயும் பெற்றுவிட்டதே என்று வியந்து பாராட்டினுர். அதற்கு காரணம் ஆழ்வார் திருநகரியில் வாழும் பக்தர்கள் உண்டு உமிழ்ந்த பிரசாதமல்லவோ? அவ்வெச்சிலில் திருவாய்மொழியின் மண மன்ருே உள்ளது? என்று இவ்வாருகத் தாம் வேதம் தமிழ் செய்த மாறனின் திருவாய் மொழியை ஓதியுணராமல் தவமியற்றி யாது பயன் என்று மனம் நொந்து திருவாய்மொழி பயிலத் தொடங்கினதாகக் கூறும் வரலாறுகளும் ஆழ்வாருடைய அருளிச் செயலின் பெருமையை விளக்குவனவாகும்.

'வாய்க்கும் குருகைத் திருவீதி யெச்சிலை வாரியுண்ட
நாய்க்கும் பரம பதமளித் தாயந்த நாயோடிந்தப்
பேய்க்கு மிடமளித் தாற்பழு தோபெரு மாள்மகுடம்
சாய்க்கும் படிக்குக் கவிசொல்லும் ஞானத் தமிழ்க்கடலே'

என்ற இந்தப்பாடலே அந்த யோகியர் இயற்றிய பாடலாகும். இவ்விதம் உலகோர் உய்யும் வண்ணம் தெரியாத மறைமொழியைத் தம் அருளுள்ளத்தாலே தெளிந்து ஓதும்படி திருவாய் மொழியை அருளிச் செய்த வேதம் தமிழ் செய்த மாறன் அவதரித்த வைகாசி விசாகத் திருநாளைப் பொய்யில்லாத மணவாள மாமுனிவன் வாக்கினுலே போற்றுவோம்.

உண்டோ வைகாசி விசாகத்துக் கொப்பொருநாள்
உண்டோ சடகோபர்க் கொப்பொருவர்—உண்டோ
திருவாய் மொழிக்கொப்பு தென்குருகைக் குண்டோ
ஒருபார் தனிலொக்கு மூர்.

---

பாடம் 2 விஞவிடை சந்தா எண்...........

[இந்த இதழிலுள்ள கட்டுரைகளிலிருந்து தான் விஞக்கள் கேட்கப் பட்டிருக்கின்றன. விஞக்களுக்குக் கீழே உள்ள இடத்தில் விடைகளேச் சுருக்கமாக, சொந்த கையெழுத்தில் எழுத வேண்டும். ஒவ்வொரு ஆங்கில மாதம் முடிவதற்குள் விடைகளே அனுப்பவேண்டும். மாதப் பரிசுகளும், ஆண்டு இறுதியில் சிறப்புப் பரிசுகளும் வழங்கப்பெறும்].

விஞக்களுக்கு மதிப்பெண் சமம்] [மதிப்பெண் 100

1. இறைவன் கூலியாளாக மண்சுமந்தார். அதஞல் அறியப் பெறுவது என்ன ?

2. குயவன் சக்கரத்தின் மேல் மண்வைத்து கலங்கள் செய்வதினின்றும் அறிந்து கொள்ளப் பெறுவது என்ன?

3. உலக ஒழுங்கு முறைக்குக் காரணம் என்ன?

4. உயிர் என்பது எது?

5. உடலுக்கும் உயிருக்கும் உள்ள பேதம் என்ன?

6. பார்த்தசாரதிப் பெருமாளுக்கு வேறு பெயர் என்ன? அதற்குக் காரணம் கூறுக?

7. திருவல்லிக்கேணி திவ்விய தேசத்தை மங்கள சாசனம் செய்தவர் யார்?

8. பார்த்தசாரதியின் திருவுருவ அதிசயம் யாது?

9. தெள்ளிய சிங்கர் யார்? இப்பெயர் எங்கே காணப்படுகிறது?

10. முருகன் எந்த நிலத்துக்குத் தெய்வம்?

11. தமிழர் இயற்கையில் முருகனைக் கண்டனர், எப்படி?

12. கந்தபுராணம் நம் சொந்தபுராணம்-விளக்குக?

13. முன்னிலைப் பரவலுக்கும் படர்க்கைப் பரவலுக்கும் வேறுபாடு என்ன?

14. 'ஒல்லையாறி' என்று தொடங்கும் திருவலிவலத்தேவாரப் பாடல் அறிவுறுத்துவது என்ன?

15. சுந்தரருக்குள்ள திருப்பெயர்கள் என்ன?

16. ஆளுடைய நம்பிகள் சைவசமயத்திற்கு ஆற்றிய பெருந் தொண்டு என்ன?

17. தோழமை நெறி--சுருக்கமாக விளக்குக?

18. சடகோபர் மற்ற குழந்தைகளைப்போல் இல்லாமல் வேறு எப்படியிருந்தார் ?

19. 'சடகோபரந்தாதி' பாடியவர் யார்? ஏன் பாடினார்?

20. நம்மாழ்வார் அருளிய பிரபந்தங்கள் எவை? அவற்றின் பெருமை என்ன?

கையெழுத்து

[பெரிய எழுத்தில் தெளிவாக எழுதுக]

பெயர் வயது

கதவு எண், தெரு

ஊர்—அஞ்சல் நிலையம்

மாவட்டம்

இதழிலுள்ள வினாப்பகுதி ஏடுகளைக் கிழித்து, விடைகளை எழுதி, உறையிலிட்டு, அகதி அஞ்சல் தலையுள்பட 25 பைசா அஞ்சல் தலைகளை ஒட்டி,கீழ்க்காணும் முகவரிக்கு அந்தந்த ஆங்கில மாதம் கடைசி நாளுக்குள் சேரும்படி அனுப்பவேண்டும்.

........................................................................................................

" அருளோசை "
தமிழ்நாடு தெய்விகப் பேரவை,
9, மகாராஜா சூரியராவ் சாலை,
ஆழ்வார்ப்பேட்டை, சென்னை-18.



## வடதிருமுல்லைவாயில் ஸ்ரீகொடியிடை நாயகி உடனுறை ஸ்ரீமாசிலாமணீசுவரர் திருக்கோயில்.

## வேண்டுகோள்.

சுந்தரமூர்த்தி சுவாமிகளின் தேவாரப் பாடல் பெற்ற திருத்தலம் வடதிருமுல்லைவாயில். அது சென்னைக்கு மேற்கே 10 கல் தொலைவில் அம்பத்தூர்-ஆவடி புகைவண்டி நிலையங்களுக்கு அருகில் புழலேரியின் கரையில் அமைந்துள்ளது. "சொல்லரும் புகழான் தொண்டைமான் களிற்றைச் சூழ்கொடி முல்லையால் கட்டிட்டு எல்லையில் இன்பம் அவன் பெற வெளிப்பட்டு அருளிய இறைவன்" என்ற வரலாற்றுச் செய்தியை சுந்தரர் தம் தேவாரத்தில் புகழ்ந்து பாடியுள்ளார். இத்திருக்கோயிலை அமைத்தவர் தொண்டமான் சக்கரவர்த்தி.

மிகப்பழமையான இத்திருக்கோயில் ஐதர் அலி படையெடுப்பின் போது சேதமடைந்து பின் 1805-ம் ஆண்டில் மாசிலாமணி முதலியார் என்பவர் பழைய நிலைக்குக் கொண்டு வந்தார். கலையழகு மிக்க இத்திருக்கோயில் மிகச் சிதிலமடைந்திருப்பதனால் 1967-ஆம் ஆண்டு, பேரவையின் சார்பில் திருப்பணி ஆரம்பிக்கப் பட்டு தற்போது மிக விரைவாக நிறைவேறி வருகிறது. பெருமக்கள் தக்க பொருளுதவி செய்து திருவருள் பெற்றுய்ய வேண்டுகிறோம்.

நன்கொடை அனுப்ப முகவரி :

ம. செல்வராஜ், பொருளாளர்.
ஸ்ரீ மாசிலாமணீசுவரர் திருக்கோயில்,
வடதிருமுல்லை வாயில் அஞ்சல்,
சென்னை--62.

இங்ஙனம்
திருப்பணிக்குழுவினர்

Edited, Printed at Peravai Achakam and Published by A. Narayanaswamy B. A.,